



# THE MERCHANT OF VENICE

## வெனீஸ் வர்த்தகன் 

---

வெனீஸ் நகரத்தில் ஒரு யூதன் இருந்தான்: அவன் பெயர் ஷைலக். அவன் தொழில் பணம் கடன் கொடுத்துக் கடுவட்டிவாங்கி ஜீவனம்பண்ணுவது. கிறிஸ்த வியாபாரிகளுக்கு அவன் கடன் கொடுத்து வாங்கின அநியாயவட்டி நாளாவர்த்தியில் தொகையேறி அளவற்ற திரவியம் சேர்ந்தது. இந்த யூதவர்த்தகன் பூததயை சிறிதும் இல்லாத வன்னெஞ்சனாகிய பாதகன். அவன் கொடுத்த பணத்தையும் வட்டியையும் மனிதர் தராதரம்பாராமல், அணுவும் தவறுமற் கடுஞ்சொற் சொல்லி நெருக்கி வருத்தி வாங்குவான்; ஆனதுபற்றி, நல்லோர் அனைவரும் அவனை வெறுத்தார்கள். முக்கியமாய் அங்கிருந்த வாலிப வர்த்தகனாகிய அந்தோனியோவிற்கு அவன்மேல் அதிக துவேஷம் உண்டாயிற்று. அந்தோனியோ ஏழைகளுக்குச் சமயத்தில் பணம் கடன் கொடுத்து இடர் தீர்ப்பான். கொடுத்த பணத்திற்கு அவன் ஒருபொழுதும் வட்டிவாங்கான். இதைத் தொட்டு ஷைலக்கும் அந்தோனியோவை ஜன்ம விரோதியென்றெண்ணி வெறுத்தான். லோபகுணமே முக்கிய லக்ஷணமாயமைந்த யூதவர்த்தகனுக்கும், உதாரகுணமே ஆபரணமாக அணிந்த அந்தோனியோவிற்கும் நட்புண்டா

வது இயற்கையல்லவே; ஒளிக்கும் இருளுக்கும் சம்பந்தம் ஏது? சுகுணத்திற்கும் துர்க்குணத்திற்கும் ஒற்றுமையுண்டா? நாணய வர்த்தகசாலையில் ஷைலக்கைக் காணும் சமயந்தோறும் அந்தோனியோ நீ கடுவட்டி வாங்கும் படுபாவியென்றும், மனுஷர் படும் துயரை எண்ணாமல் இடர்செய்யும் நிஷ்டூரனென்றும் திட்டுவான். ஷைலக் வெட்டெனப் பேசாமல் மெத்தென விருப்பவன்போல வெளிக்கு நடிப்பான்; உள்ளத்தில் அவனுக்கு அதிக விஷம் பெரியது, க்ஷாத்திரம் சாதிக்கச் சமயம் எப்பொழுது வாய்க்குமென்று பதைக்காமற் பொறுத்திருந்தான்.

அந்தோனியோ அதிதயாளு; நிறைவளம்பெற்றோன்; நல்வார்த்தை சொல்லி மனுஷரை உபசரிப்பதில் இளைக்கா முயற்சியுள்ளவன். பூர்விக ரோமருடைய கௌரவம் அவனிடத்தில் விளங்கினதுபோல, இத்தாலியாவிற் பிறந்த மற்றெவரிடத்திலுங் காணப்படவில்லை. வெனீஸ் நகரவாசிகள் அனைவரும் அவனுயிரைத் தம்முயிர்போலெண்ணி அவனில் அன்புகூர்ந்தார்கள். நகமும் சதையும்போல் அவனுக்கு உரிமைபொருந்திப் பிராண இஷ்டனாயிருந்தவன் பஸ்ஸானியோ என்னும் வெனீஷிய பிரபு. அந்தப் பிரபுவிற்குப் பிதுரார்ஜித சொத்து மிதமாயிருந்தது. அவன் மிக்க சம்பிரமமாக வாழ்ந்து, தன் சொத்தைப் போக்கடித்தான். உயர்குலத்திற் பிறந்த வாலிபரிற் சொத்து மிதமாயுள்ளவர்கள் அனைவரும் அதை அவ்வாறு வரம்பு கடந்து செலவிட்டுத் தொலைப்பது இயற்கைதான். வரவிற்குச் செலவு மிஞ்சும் குடித்தனம் வரவர இளைத்துச் சிதைவது வழக்கமேதவிர, மற்றப்படியல்ல. இது நிற்க, பஸ்ஸானியோ வரம்பு கடந்து செலவுசெய்து தன் சொத்தைத் தொலைத்தபின் செலவிற்கு வருவழியின்றி வருந்துமுன்,

அவன் இஷ்டன் அந்தோனியோ அவனுக்கு வேண்டுமள விற்குத் தனம் கொடுத்து உதவினன். அவ்விருவருக்கும் உடல் இரண்டு, உள்ளம் ஒன்று. ரொக்கம் அவனதென் றும் இவனதென்றும் பேதமின்றி இருவருக்கும் பொதுவா கவே இருந்தது.

ஒரு நாள் பஸ்ஸானியோ அந்தோனியோவிடத்திற்குப் போய், "எனது முக்கிய இஷ்டரே, மிதந்தப்பிச் செலவு செய்து என் பொருள் அழிந்ததறிவீரே. திரண்ட திரவிய முள்ள குலஸ்திரீ ஒருத்தியை மணஞ்செய்தால் என் மிடி தீருமென்று எண்ணுகின்றேன். அக்குலமகள் எனக்குப் பிராண பதமானவள். அவள் தந்தை சமீபகாலத்தில் மரணமடைந்தார். வரம்பற்ற அவர் சொத்து முழுதும் அவள் ஒருத்திக்கே ஆதீனமாயிற்று. தந்தை இருக்கும் பொழுது நான் அவரைச் சந்திக்கப் போனதுண்டு. போ யிருக்கும் சமயத்தில் அவர் குமாரத்தி என்னைக் கண்டு, என்மீது சிந்தை வைத்திருப்பவள்போலத் தோன்றினள். நான் அவள் கண்ணோக்கத்தின் குறிப்பைக் கண்டு, அது மனதிற்கினிய ஆடவனாகிய என்னைத் தன் பிராணநாயக னாக்க இடம்பெறுவதே பெறுதற்கரிய பெரும்பாக்கிய மென்று அவள் குறிப்பிக்கும் எழுதா நிருபமெனப் பாவித் தேன், பாவித்தும், கோடி திரவியத்தைச் சுதந்தரிக்கும் உரிமையுள்ள அவ்வுத்தமியை மணங்கேட்கும் ஆடவர்க்கு ஏற்குமாறு உடுக்க, உலாவ, சுகிக்கத் தக்க இடம் பொருள் ஏவல் எனக்கு இல்லையே. இதற்கென்ன செய்வேன்; நீர் இன்றளவும் எனக்குச் செய்யாமற்செய்த பேருதவியுடன் பின்னும் பன்னீராயிரம் ரூபாய் இச்சமயத்திற் கடனாகத் தந்து உதவுவீரானல், ஒப்பற்ற இந்நன்றியை உயிருள்ளள வும் மறவேன்; விரும்பிய மணமும் தவறாது நடக்கும்" எனத் தன் கருத்தை வெளியிட்டான்.

இஷ்டனுக்குக் கொடுத்துதவ அச்சமயத்தில் அந்தோனியோ கையில் ரொக்கம் இல்லை. அங்கங்கே போன கப்பல்கள் சில சரக்கேற்றிக்கொண்டு ஐந்தாறு தினத்தில் திரும்பிவந்து துறை சேருமென அவன் எதிர்பார்த்திருந்தான்; ஆனதுபற்றி, வட்டிக்குப் பணம் கடன் கொடுக்கும் மிக்க தன முடையோனாகிய ஷைலக்கைக் கண்டு, தன் கப்பல்களை ஈடுகாட்டி, மேற்குறித்த தொகையை வட்டிக்குக் கொடுத்துதவக் கேட்பதாகப் பஸ்ஸானியோவிற்குச் சொன்னான்.

சொற்படி அந்தோனியோ பஸ்ஸானியோ இருவரும் ஷைலக்கைக் கண்டு பேசப் போனார்கள். போய், அந்தோனியோ 'ஆயிரம் ரூபாய் இச்சமயத்திற் கொடுத்துதவினால், சிலநாளில் என் உருக்கள் துறை சேரும்பொழுது சரக்கு விற்கும் பணத்தில் உமது கடனை முதலும் வட்டியும் சேர்த்துச் செலுத்திவிடுகிறேன்; நீர் என்ன வட்டி கேட்பினும் கொடுப்பேன்' என யூதவர்த்தகனாகிய ஷைலக்கைக் கேட்டான். அவன் வாய்ச்சொற் கேட்கவும், ஷைலக்கின் உள்ளத்தில் பின் வருமாறு சிந்தனை ஓடியது:—"இவனை ஒரு முறையாவது என் வசப்படுத்துவேனானால், எனக்கு இவன் மீதுள்ள க்ஷாத்திரத்தை எளிதிற் சாதிக்கமாட்டுவேன். இவன் எங்கள் குலத்திற்கு ஜன்ம விரோதி. கேட்கும் அனைவருக்கும் வட்டிவாசி வாங்காமற் கடன் கொடுத்துவருகிறான். என்னைப்போலும் வர்த்தகரைக் காணும் சமயந்தோறும் இவன் நிந்தைசொல்லி எனக்கு நீங்காவசை வருவிக்கிறான். பாடுபட்டுத் தேடிவைத்த எனது திரவியம் அத்தனையும் அநியாயவட்டி வாங்கிச் சேர்ந்ததென்று அபவாதம் சொல்லுகிறான். இவ்வாறு இவன் எனக்குச் செய்துவரும் நிஷ்டூரத்திற்கு அளவுமில்லை, கணக்குமில்லை.

இவன் செய்த துரோகத்தை மறந்து இச்சமயத்தில் இவனைத் தப்பவிடுவேனானால், எனது குலம் இருந்தென்ன இறந்தென்ன!" இவ்வாறு ஷைலக் எண்ணிக்கொண்டு இருந்தானேயன்றி, அந்தோனியோ கேட்ட கேள்விக்கு உத்தரம் ஒன்றும் சொல்லவில்லை. ஆத்திரக்காரனுக்குப் புத்தி மட்டு என்பதுபோல், அந்தோனியோவுக்கு வாய் பதைத்தது. தன் மொழிக்கு மறுமொழி ஷைலக் வாக்கினின்று பிறவாததுபற்றி, அந்தோனியோ மிக ஆவலித்து, "நான் சொன்னது கேட்டதா ஷைலக்? பணம் தருவீரா? வாய் திறந்து ஒருமறுமொழி சொல்லும்? மௌனம் சாதிக்க இது சமயமல்ல" என்று வினவினான். இவ்வினாவிற்கு யூதவர்த்தகன், "பிரபுவாகிய அந்தோனியோ, நான் அநியாயவட்டிக்குப் பணம் கடன் கொடுத்து அளவற்ற திரவியம் தேடின பாதகனென்று நீர் ஒரு நாளல்ல பல நாள் வைததுண்டு. இப்படி நிர்நிமித்தமாக அபத்தஞ்சொல்லி என்னைத் திட்டியதை நான் சிறிதும் பாராட்டவில்லை, திரணமும் பொருள் செய்யவில்லை. பிறர்செய் தீங்கைச் சிந்தையில் வைக்காமல் மறந்து பொறுத்திருப்பதே எங்கள் குலத்தைச் சிறப்பிக்கும் விருதுக்கொடிக்குச் சமானமாகிய சிறந்த குணாபரணம். நீர் என்மேற் செய்த நிந்தை இம்மாத்திரமல்ல; என்னைக் கடவுளுடைய திருவடிகளை வழிபடாத துரோகியென்றும், சேர்ந்தார் கழுத்தைத் திருகிக் கொல்லும் நீசகுணமுள்ள நாய்மகனென்றும், எவரும் செவியினால் கேட்கவும், மனதினால் நினைக்கவும் தகாத வசைகளைச் சொல்லி என்னைத் திட்டினீர்; வாய்க்கு வந்தபடி தூஷித்தீர்; யூதனாகிய எனது ஆடையில் எச்சில் உமிழ்ந்தீர். என்னை நாயினும் கடையனென்று இகழ்ந்தீர்; காலால் உதைத்தீர். நல்லது, நான் சொல்வதில் எவ்வளவேனும் அபத்தம் உண்டா? உள்ளதை உள்ளபடி உமது கண்ணுக்கு எதிரே நின்று சொ

ல்லுகிறேன். வரம்பு கடந்து வைத நீர் இப்பொழுது என்னைப் பொருள்செய்து என் உதவிவேண்டி வந்தீர். வந்து, 'ஷைலக்! கொஞ்சம் பணம் கடன் கொடுத்துதவும்' எனக் கேட்டீர். நாய்மகனிடத்திற் பணம் ஏது? ஒரு நாய் ஆறுயிரம் ரூபாய் வட்டிக்குக் கொடுக்க வைத்திருப்பதுண்டா? நெறிதவறாத நேர்மையுள்ள பிரபுவே! சென்ற வாரம் புதன்கிழமை நீர் எனது ஆடையில் எச்சில் உமிழ்ந்தும், மற்றொருமுறை என்னை நாயினும் கடையனென்று நிந்தித்தும், இவ்வாறு பல மரியாதைகள் செய்து உபசரித்ததை எண்ணி, கேட்ட பணம் இந்தக்ஷணமே தருவேனென்று தலை வணங்கிச் சொல்லட்டுமா" எனக் கேட்டான். அதற்கு அந்தோனியோ சொன்ன பிரதியுத்தரம் இது:— "இம்மட்டில் விடுவேனென்று எண்ணவேண்டாம். இன்னும் நிந்தனை சொல்வேன், எச்சில் உமிழ்வேன், வாயில்வந்தபடி பேசுவேன். கேட்ட பணம் தருவது உனக்குச் சம்மதமானால், என்னை மித்திரனென்றல்ல, சத்துருவென்று உத்தேசித்துத் தா; நான் கைம்முதல் இழந்து கடன் இறுக்க அசக்தனுவேனானல், தாக்ஷிண்யமின்றி என்னை நெருக்கிக்கேட்டு, குறித்த தண்டம் இறுப்பிப்பாயல்லவா." இச்சொற்கேட்டு, ஷைலக், "ஏன் பதறி உதறிப் பரிதபிக்கிறாய்? ஏன் இரைகிறாய்! நான் உன்னுடன் உறவாட விரும்பி உன் நட்பை நாடுகிறேனே. எனக்கு உன்னால் வந்த மானபங்கத்தை மறந்துவிடுகிறேன். உனக்கு வேண்டும் திரவியம் கொடுத்து உதவுவேன். அதற்கு வட்டி வாசி கேளேன்" என்று உபசாரவார்த்தை சொல்லக் கேட்டு, அந்தோனியோ ஆச்சரியபரவசம் அடைந்தான். பின்னும் ஷைலக், "நான் உனக்குச் செய்யும் அனைத்தையும் செய்வது உனது உறவை நாடியேதவிர மற்றப்படி அல்ல; கேட்ட கடன் 6000 ரூபாயும் கொடுக்கிறேன். ஒரு துட்

டும் வட்டி வாங்கேன். வா, இருவரும் நியாயவாதியிடத்திற்குப் போவோம். தவணை குறித்துச் சந்தோஷமாய்ப் பத்திரம் எழுதிக் கொடு. அத்தவணைக்குள் வாங்கின கடன் இறுக்காவிட்டால், உன் அங்கத்தில் எனக்கு இஷ்டமான அவயவத்தில் ஒரு ருத்தல் மாமிசம் அறுத்தெடுக்க விடுவதாக அதில் விவரம் கண்டெழுது. இது ஒன்றுதான் உன்னைக் கேட்கிறேன். இது செய்வது பாரமா, பழியா?" என அந்தோனியோவின் சிந்தையில் அழுந்தச் சொன்னான்.

அந்தோனியோ—உமது சொற்படி செய்யச் சம்மதிக்கிறேன்; இப்பத்திரத்திற்குக் கையொப்பமிட்டு, யூதகுலத்தார்க்குப் யூததயை மிகுதியென்று ஒப்புக்கொள்வேன்.

பஸ்ஸானியோ—(அந்தோனியோவை நோக்கி) என் பொருட்டு நீர் இவ்விதப் பத்திரம் எழுதிக்கொடுக்க நிமித்தம் இல்லை.

அந்தோனியோ—வாங்கும் கடன்தொகைக்கு நூறுமடங்கு அதிக விலைதாளும் சரக்கு ஏறிய என் உருக்கள் கடன் இறுக்கக் குறித்த காலம் கிட்டுமுன் இத்துறை சேர்ந்திருக்குமே: பதறுமற் பத்திரம் எழுதிக்கொடுப்பேன்.

இவ்விருவர் விவாதத்தை எட்ட நின்று கேட்ட ஷைலக் சித்தம் சலித்து, "அப்பா! இக்கிறிஸ்து சமயிகளுக்கு உண்டாகும் பரமசந்தேகத்தை என்னென்று சொல்வேன்! 'கள்ளன் மனம் காடுகொள்ளாது,' 'கள்ளமனம் துள்ளும்,' உளளப்பசை எள்ளளவுமின்றி உலகத்தில் நாள்கழிக்கும் இவர்கள் தம்மைப்போலப் பிறரையும் கள்ளமனமுள்ளவர்களென்று எண்ணுவார்கள். பஸ்ஸானியோ! ஒரு கேள்விக்கு உத்தரம் சொல்லப் பிரார்த்திக்கிறேன், உற்றுக்கேள். 'உடைமையும் வறுமையும் ஒருவழி நில்லா,' 'குன்றத்தனை

இருநிதியைப் படைத்தோர், அன்றைப்பகலே அழியினும் அழிவார்,' 'பணம் இருந்தாற் பாச்சா, பணம் இல்லாவிட்டாற் பக்கிரி' என வழங்கும் நீதிவாக்கியங்கள், மூதுரைகள் பல உண்டு. செல்வப்பொருள் அத்தனையும் போக்கடித்து, யாசகனுகி, அந்தோனியோ இன்றே கப்பரை ஏந்தித் திரிய நேரிடுமானுல், பத்திரத்திற் குறித்த சங்கேதப்படி அவன் உடலில் ஒருறுப்புத் தசையைத் துண்டித்து வாங்கி எனக்கு வரும் பயன் என்ன? நரமாமிசம் ஓரிருத்தல் என்னத்திற்கு உதவும்? அதைத் தேடுவார் யாவர்? அசமாம்சமானுலும் உணவிற்கு ஆகும்; எளிதிற் செலவாகும். இதைத் தேறத் தெளியச் சிந்தித்துப்பார். அழியும் அற்ப தனத்தை அல்ல அவன் தயவையே அபேக்ஷித்து, உற்ற சமயத்திற் கடன் கொடுத்து உதவ உடன்படுகிறேன்; கரும்புதின்னக் கைக்கூலி கட்டுவார் இல்லை. இஷ்டமானுற் பணத்தை ஏற்கட்டும்; அல்லாவிடில், சீமானுகை எழுந்து போகட்டும்" என்முன்.

தன் நெஞ்சில் புனைசுருட்டு எவ்வளவும் இல்லையென்று யூதன் சொன்ன இன்சொல் அனைத்தும் கேட்டபின்னும் பஸ்ஸானியோ மனம் தரிக்கவில்லை. தன்னிமித்தம் தசை அறுத்துக் கொடுக்க உடன்படும் விபரீதத்தைத் தடுக்கும் வண்ணம் அவன் அந்தோனியோவிற்குப் புத்திமதிகள் பல சொன்னுன்; ஒன்றும் அவன் செவிக்கு ஏறவில்லை. இது பரிகாச உடன்படிக்கை என யூதன் சொன்ன சொல்லை உறுதியென்று எண்ணி, அந்தோனியோ பத்திரத்திற்குக் கையொப்பமிட்டுத் தன் விரதம் முடித்தான்.

பஸ்ஸானியோ மணம் புரிய நாடிய திரவிய சம்பன்ன சுந்தரி வசிக்கும் இடம் பெல்மோந்து. அது வெனீஸிற்குச் சமீபம். அவள் பெயர் போர்ஷியா. முன் இப்பெயர் வழங்கிய கேத்தோ புத்திரியும் புரூத்தஸ் பத்தினியுமாகிய பெ

ருமாட்டிக்கு மங்கையர்க்குள் இணை எவரும் இல்லையென்று எழுதியிருப்பதை வாசித்திருக்கிறோமே. அந்தப் போர்ஷியாவிற்கு இந்தக் கன்னி அகத்தழகு முகத்தழகு இரண்டிலும் ஈடாவாளேதவிர, சிறிதும் குறைந்தவள் அல்லள்.

மேற்சொல்லியவாறு நண்பனுக்காகத் தன் உயிர் மறுத்து, அந்தோனியோ பத்திரம் எழுதி வாங்கிக்கொடுத்த பணத்தைக்கொண்டு, பஸ்ஸானியோ இருமருங்கும் அணியணியாகப் பரிஜனம் செல்ல, குலமகனாகிய கிரேஷியானோவுடன் பெல்மோந்துக்குப் பிரயாணப்பட்டான். அவன் அவ்விடம் சேர்ந்து, ஏற்குமுறைப்படி மணம் கேட்க, இரண்டொருதினத்தில் போர்ஷியா அவனுக்குப் பிராணநாயகியாக உடன் பட்டாள். இருவரும் கலந்து சம்பாஷிக்கும் சமயத்தில், பஸ்ஸானியோ உயர்ந்த குடிப்பிறப்பும் உசிதகுல மரியாதையுமொழிய, உலகம் மதிக்கும் பொருட்செல்லப் பிரதாபம் தனக்கு எவ்வளவும் இல்லையென்று அறிக்கை செய்தான். திரண்டசெல்வமுள்ள சீமானைத்தேடி மணம் புரியப் போர்ஷியா தரித்திரதசையில் இருந்து வருந்தினவள் அல்லவே. அவளுக்கு நிறைசெல்வம் இருந்தது. உன்னதகுணபூஷணமே தனக்கு என்று மழியாப் பெருமையென்று எண்ணி, அவனுக்குப் பாரியையாக அபேக்ஷித்த அவள் யாவரும் நன்குமதிக்கத்தகும் அவன் தனவானல்லவென்று தள்ளிவிடுவாளா? நாகரிகம் பயின்ற அந்தக் கன்னி பஸ்ஸானியோவிற்கு அதிவிநய பக்தியுடன் மறுமொழி சொன்னாள். தன் அழகும் ஐசுவரியமும் ஆயிரமடங்கு பின்னும் அதிகரித்தாலன்றி, தான் அவனுக்கு வாழ்க்கைத் துணைவியாகும் வரம்பெறப் பூரண யோக்கியதையுள்ளவளல்லவென்று தாழ்ந்து பணிந்து மொழிந்தாள். "எல்லார்க்குநன்றும் பணிதலவருள்ளும் செல்வர்க்கே செல்வம் தகைத்து" என்ற

படி வியக்கத்தகும் அற்புத குணாதிசயங்கள் பல அமைந்த அச்சுந்தரமாது பின்வருமாறு தன்னை நயமுறத் தாழ்த்திப் பேசினாள். "நான் ஏதும் கற்றறியாத சிறுமி, பள்ளிப்பழக்கம் பயின்றவள் அல்ல, யாதொரு விஷயத்திலும் கைதேர்ந்தவளல்ல; ஆனாலும் என்ன, கல்விகற்கும் பருவம் இன்னும் கழியவில்லையே. வணங்கி வழிபட்டுத் தங்கள் சொல்லைக் குருமொழியாகத் தலைமேற்கொண்டு நடக்கச் சித்தமாயிருக்கிறேன். நான், எனது எனும் சுதந்தரம் இன்றுதொடங்கி எனக்கு இல்லை. இனி நான் தாங்களே, என் சொத்துத் தங்கள் சொத்தே. எட்டுப் பத்து வருஷத்திற்குமுன் அல்ல, நேற்றுப் பரிஜனங்கள் வெகுபெயர் கொத்தடிமைத் தொழில் செய்ய, இச்சிங்கார மாளிகையில் சுவாதீன சக்கரவர்த்தினியாக விற்றிருந்த நான் இன்று என்னையும், அவர்களையும், இம்மாளிகையையும், மற்றுமுள்ள சர்வசொத்தையும் இக் கணையாழியுடன் தங்களுக்குக் காணிக்கையாகச் சமர்ப்பிக்கிறேன்." என்றனள்.

திரண்ட திரவியமும் குலநல முதலிய சர்வ குணாதிசயங்களுமுள்ள போர்ஷியா தனம் சிறியனாகிய தனக்கு மிக்க விநயத்துடன் செய்யாமற்செய்த விசேஷ மரியாதை உபசரணைகளை நினைக்க நினைக்க, பஸ்ஸானியோவின் உள்ளம் நெக்குருகி, அடங்கா அதிசயமும் ஆநந்தமும் அடைந்தது. தன்னை இவ்வாறு கௌரவப்படுத்திய பிராணபதமான பெருமாட்டியை அவன் மட்டின்றிச் சன்மானித்தான். இவ்வண்ணம் அதிசய பரவசமானதினால், அக்குலமகளுக்கு வந்தனம் சொல்லவும், தன் மனங்கொள்ளாத அன்பை வெளியிடவும் பஸ்ஸானியோவிற்குத் தடையற நா எழவில்லை; உணர்ச்சியின்றி இரண்டொரு சொல் சொன்னான். அரிதிற்பெற்ற விலையுயர்ந்த கணையாழியை அகமகிழ்ந்து

கையேற்று, ஜீவன் உள்ளளவும் அதைக் கைநெகிழ விடுவதில்லை என்று சங்கற்பித்தான்.

பஸ்ஸானியோவின் வாழ்க்கைத் துணைவியாகி அவன் சொல்வழிப்படப் போர்ஷியா வாக்குத்தத்தஞ் செய்தபொழுது, கூடநின்ற பாங்கி நிரிஸ்ஸா என்னும் வண்ணமகள். பஸ்ஸானியோவுடன் இருந்த பாங்கன் கிரேஷியானியோ. அவன் அப்பெருமானையும் உதாரகுண பூஷணியாகிய பெருமாட்டியையும் வாயார வாழ்த்தி, அவர்கள் மணம் புரியும் மங்கலமுகூர்த்தத்தில் தனக்கும் மணம் செய்ய விடைதரக் கேட்டான். "பெண் அகப்பட்டால் நீரும் அன்றே விவாகம் செய்வது எனது அபேக்ஷை" என்று பஸ்ஸானியோ மறுமொழி சொன்னான். அதுகேட்டு, கிரேஷியானோ "போர்ஷியாப் பிராட்டியின் பாங்கியாகிய நிரிஸ்ஸா என்னும் குலமகளில் ஆசைகூர்ந்து மணங்கேட்டேன். தன் தலைவி பஸ்ஸானியோவை மணம் புரிந்தால், தானும் எனக்குத் தாரமாக அவ்வுத்தமி உடன்பட்டாள்" என, போர்ஷியா திரும்பிப்பார்த்து: இவர் வாய்மொழி வாஸ்தவமா என வினவ நிரிஸ்ஸா: "அம்மைக்குச் சம்மதியானால், அது மெய்தான்" என்றாள். போர்ஷியா மனப்பூர்வமாய்ச் சம்மதித்தாள். "அப்படியானால், உமது விவாகத்தால் எங்கள் விவாக உற்சவத்திற்கு அளவற்ற பிரதிஷ்டை உண்டாகுமே" என்று பஸ்ஸானியோ கிரேஷியானோவிற்கு நயமாய் மொழிந்தான்.

இவ்விருதிறத்தாரும் மங்கலவிவாகத்திற்கு மனம்பொருந்தி மகிழ்ந்திருக்கும் சமயத்தில், 'கிணறுவெட்டப் பூதம் புறப்பட்டதுபோல' அச்சமும் நடுக்கமும் உண்டாக்கும் சங்கதி விவரம் எழுதிய அந்தோனியோவின் கடிதம்கொண்டு ஒரு தூதன் அவர்கள் சமுகத்தில் சேர்ந்தான். அதை

வாங்கி முத்திரையுடைத்துப் படிக்கவும், பஸ்ஸானியோ விற்குத் தலையிறக்கம் உண்டாய், முகத்தோற்றம் வெளுத்து வேறுபட்டது. அதுகண்டு, கண்ணுக்குக் கண்ணான நண்பர் எவரோ இறந்த துக்கசமாசாரம் வந்திருப்பினும் இருக்கலாமென்றெண்ணி ஏக்கமுற்று, போர்ஷியா, சடிதியில் தங்களுக்குத் தாங்கரிய மனத்துயர் வருவித்த சங்கதி என்னவென்று கேட்க, பஸ்ஸானியோ, "கேளாய், மயிலினது சாயலுள்ள பெண்ணே! வந்த செய்திமனதிற்கு இனியதல்ல, சொல்வதற்கு அரிய துன்பம் தருவது. நான் உன்மீது ஆசைகூர்ந்து மணம் கேட்டபொழுது எனக்குக் குலநலம் ஒன்றுதவிர, செல்வப்பொருள்நலம் சிறிதும் இல்லையென்று பதருமற் சொன்னேனே, ஒன்று சொல்லாது ஒழிந்தேன்; உற்றுக்கேள். என் தோள்மீது கடன் சுமை ஏறி இருக்கின்றது. எனக்குத் திரவியம் கடன்கொடுத்துதவிய இஷ்டர் அந்தோனியோ. அது அவர் சொத்தல்ல, இன்ன தவணைக்குமுன் கொடுத்துத் தீர்க்காதிருந்தால் தன் உடலில் தசை ஒருருத்தல் அறுத்தெடுக்க விடுவதாகச் சம்மதித்துக் கடன்பத்திரம் எழுதிக்கொடுத்து ஷைலக் எனும் யூதவர்த்தகனிடத்தில் அவர் வாங்கித்தந்த ரொக்கம்" என வெளியிட்டு அதன்மேல் வந்த கடிதத்தைப் போர்ஷியா கேட்க வாசித்தான். அதன் அபிப்பிராயம் இது;—"எனதுயிர்த் தோழர் பஸ்ஸானியோ அறியவும்; இன்று வரும் நாளைவருமென்று எதிர்பார்த்திருந்த என் உருக்கள் கடலில் முழுகிப் போயின. யூதனுக்கு எழுதிக்கொடுத்த பத்திரத்திற் கண்ட தொகையைச் செலுத்துங் காலம் கிட்டியது. அது செலுத்தியபின் பிழைத்திருக்க வகை இல்லையென்று உமக்குத் தெரியுமே. மரணத்தறுவாயில் உம்மைக் காணும் ஆசையால் இக்கடிதம் எழுதினேன்; ஆனாலும் உமதுஇஷ்டப்படி செய்யும். என்னிடத்தில் உமக்கு என்றும் அழியாநட்பு இருந்

தால் வாரும். கடிதம் எழுதி அழைத்ததுபற்றிவரில் வர வேண்டாம் — இப்படிக்கு, அந்தோனியோ" இவ்வாசகங் கேட்டவுடன் போர்ஷியா பஸ்ஸானியோவை நோக்கி: "என் பிராணேசரே! அச்சம் தவிர்த்து, நாடிவந்த சுபகாரியத்தைக் கூடிய விரைவில் நன்குமுடித்துப் போய்வாருங்கள். தங்களுக்குச் சமயத்திற் சகாயஞ்செய்த இஷ்டருக்கு நஷ்டம் வருமென்று எண்ணித் துணுக்குறவேண்டாம். தங்கள் நிமித்தம் அவர் சிரசில் ஒரு ரோமமும் உதிரவிடேன். பட்டகடனுக்கு இருபதின் மடங்கு அதிக ரொக்கம்தருவேன். தங்களை இவ்வாறு என் கணவராகப் பெறுவது அரும்பேறு, அதனால் என்றும் எனது பிராணபதமாக நேசிப்பேன். என் சொத்தின் உரிமை தர்மசாஸ்திரப்படி தங்களுக்கு உண்டாம் பொருட்டு, பிரயாணப்படுமுன்னதாகவே விவாக உற்சவம் நிறைவேற்றவேண்டும்" என உரைத்தாள். அன்றையதினமே அவர்களுக்கன்றி, கிரேஷியானோ, நிரிஸ்ஸா எனும் இருவருக்கும் விவாகம் நடந்தது. நடந்த க்ஷணமே பஸ்ஸானியோவும் கிரேஷியானோவும் பிரயாணப்பட்டு, வெனிஸுக்கு விரைந்துபோனார்கள்; போய்ச் சேர்ந்தபொழுது, அந்தோனியோ சிறையிருக்கக் கண்டனர்.

கடன் பணத்தைக் கொடுத்து அந்தோனியோவைச் சிறைமீட்க பஸ்ஸானியோ யூதவர்த்தகனைக் கண்டு பேசியபொழுது, அவன் தவணை சென்றதனால், உடன்படிக்கைப் பிரகாரம் அந்தோனியோவின் உடலில் ஒரு றாத்தல் மாமிசம் அரிந்தெடுத்துக்கொள்வதொழியப் பணம் ஏற்பதில்லையென்று ஷைலக் சாதித்தான். அஞ்சாத் துணிவுடையோர்க்கும் அச்சந்தரும் தன்மையுள்ள இந்த வியாச்சிய விசாரணைக்குத் தினம் குறிக்கப்பட்டது. நீதியதிபர் வெனிஸ் டியூக் பிரபு. பிறக்கும் தீர்ப்பு ஏதென்று உறுதி அறியுமளவும் பஸ்ஸானியோ திகைத்து வருந்தினான்.

இது நிற்க, பஸ்ஸானியோ செலவு பெற்றுப் பிரயாண ப்படும் சமயத்தில், போர்ஷியா அவனுக்கு இதம் சொல்லி மனந் தேற்றி, திரும்பிவரும்பொழுது அவன் உயிர்த்தோழனை அழைத்துவரச் சொன்னாள்; சொல்லியும், அந்தோனியோ தப்புவது அரிதென்றெண்ணி, அவளுள்ளம் அச்சத்தாற் சலித்தது. பின்பு ஏகாந்தமாய் இருக்கும்பொழுது, தன் பிராணநாயகருடைய இஷ்டனை மரணத்திற்குத் தப்புவிக்கும் உபாயம் ஏதுமுண்டோவென்று அவள் தீர்க்காலோசனை செய்தாள். முன்பு பஸ்ஸானியோவிற்கு வாக்குபசரனை செய்யும்வண்ணம், சாந்தமும் மனைவியர்க்குரிய ஒழுக்க நலமும் விளங்க, அவள் எந்த விஷயத்திலும் அனுபவமுதிர்ந்த அறிஞனாகிய அவன் சொற்படி நடக்கப் பிரதிக்கனை செய்திருப்பதாக வெளியிட்டது மெய்தான். அதை அவள் மறக்கவில்லை. மறவாதிருந்தும், தன்னாற் சன்மானிக்கப்படும் தலைவரது முக்கிய இஷ்டனுக்குப் பிராணசங்கடம் நேரிட்டது கண்டு, பதைப்பற்றுச் செயலொழிந்திருக்க அந்தப் பெண் மனம் உடன்படுமோ? பிராணரக்ஷை செய்யுந்திறம் தனக்குண்டென்று அவள் உறுதியாய் நம்பினாள். அவள் பிறர் புத்தி கேளாமல், மயக்கமறத் தெளிந்த தன் மதிவசப்பட்டு, தானே வெனீஸுக்குப் போய் அந்தோனியோவின் பட்சத்தில் வாதிக்க நிர்ணயித்தாள்.

போர்ஷியாவின் பந்துக்களில் ஒருவர் நியாயசாஸ்திர விற்பத்தியுள்ள நியாயவாதி. அவர் நாமதேயம் பெல்லாரியோ. அந்த நிபுணருக்கு அவள் கடிதம் எழுதி வழக்குத் தோரணையைத் தெரிவித்து, அபிப்பிராயம் எழுதவும், நியாயவாதிகள் தரிக்கு நிலையங்கி ஒன்று அனுப்பவும் கேட்டனள். மேற்படி நியாயவாதி விவகாரம் நடத்தும் முறை விளக்கும் உத்தரபத்திரமும், நியாயவாதிகள் தரிக்கும்

நிலையங்கி ஒரு ஜோடும் கடிதங்கொண்டுபோன சேகவனிடத்திற் கொடுத்தனுப்பினர்.

போர்ஷியா புருஷவேஷம் பூண்டு, நியாயவாதி அங்கி தரித்து, நிரிஸ்ஸாவையும் ஆடவர் உடை தரிப்பித்து, தனக்கு லிகிதனுக அழைத்துக்கொண்டு, அந்தக்ஷணமே வெனீஸுக்குப் பிரயாணப்பட்டனள். இருவரும் வியாச்சிய விசாரணைக்குக் குறித்த தினமே போய்ச் சேர்ந்தார்கள். வெனீஸ் டியூக் அதிபரும் அமைச்சரும் அத்தாணி மண்டபம் சேர்ந்து, விசாரணை தொடங்க எத்தனிக்கும் சமயத்தில், போர்ஷியா தர்மசபை ஏறி, பெல்லாரியோ எழுதிய கடிதம் ஒன்றை நீதியதிபர் கையிற் கொடுக்க, அவர் உடைத்துப் படித்தார். அதன் அபிப்பிராயம் அடியிற் காண்க:—"கௌரவ நீதியதிபர் அறியவும், அந்தோனியோவிற்காக வாதிக்க வர நினைத்திருந்தும், அசௌக்கியத்தால் என் பிரயாணம் தடைப்பட்டது. இக்கடிதம் கொண்டுவரும் வாலிபராகிய நியாயசாஸ்திரபண்டிதர் பல்தாஸரை (போர்ஷியாவின் போலிப்பெயர்) எனக்குப் பதில்நின்று பிரதிவாதம் செய்ய அனுப்புகிறேன். தயைகூர்ந்து இதற்கு இடம் தரப் பிரார்த்திக்கிறேன்—இப்படிக்கு, பெல்லாரியோ." கடிதத்திற் கண்டபடி, நீதியதிபர் உத்தரவு கொடுத்தார். தமக்கு அறிமுகம் இல்லாத நியாயவாதியின் யௌவனத்தைப் பார்க்கப் பார்க்க, நீதியதிபருக்கு மனம் கொள்ளா அதிசயமுண்டாயிற்று. நியாயவாதிகள் தரிக்கும் நிலையங்கியும், பொய்மயிரும் தரித்த போர்ஷியாவிற்கு அந்த வேஷம் நயம்பெற வாய்த்தது.

இப்பால், மேற்குறித்த சூக்ஷ்ம வியாச்சிய விசாரணை தொடங்கியது. போர்ஷியா நான்கு திக்கிலும் நின்றவர்களைச் சுற்றிப் பார்த்தாள். தயாசிந்தை சற்றும் இல்லாத

யூதவர்த்தகனையும், தனதுள்ளத்தைக் கொள்ளைகொண்ட கணவர் பஸ்ஸானியோவையும் கண்டாள். பொய்வேஷம் கொண்ட அவள் முகக்குறி பஸ்ஸானியோவிற்குப் புலப்பட வில்லை. இஷ்டனுக்கு என்ன கதிவருமோவென்று எண்ண மிட்டு, இடியுண்ட அரவம்போல் ஏங்கித் திகைத்து, அவன் அந்தோனியோவின் அருகில் நின்றான்.

தான் வாதிக்க ஏற்பட்ட வழக்கின் தர்மசங்கடத்தை எண்ண எண்ண, யௌவனபருவமுள்ள போர்ஷியாவிற்கு அற்புத ஆண்மையும் துணிவும் பிறந்தன. அவள் கைக் கொண்ட கருமத்தை ஊக்கத்துடன் செய்து முடிக்க ஆரம் பித்தாள். முதலில் அவள் வாதி ஷைலக்குக்கு வழக்கின் தாற்பரியத்தை விரித்துரைக்க முயன்று, பத்திரத்தில் விதித்த தண்டம் வாங்கும் சுதந்தரம் அவனுக்குப் பூர்த்தி யாய் உண்டென ஒப்புக்கொண்டபின், இரக்கம் என்னும் உன்னத குணத்தின் தன்மையை கேட்பவர் நெஞ்சு கனிய விளக்கினாள். அச்சொற்கேட்டும் எவர்கள் நெஞ்சும் உலை யில் இட்ட மெழுகுபோலக் கரைந்து உருக, அன்பு ஊறி, கண்ணீர் அருவி பெருகுவதற்கு ஐயமில்லை. பிறர் துய ரைத் தன் துயரெனப் பாவித்துப் பரிதபித்து வழக்கப் படாத ஷைலக்கின் வன்னெஞ்சோ, அற்பமேனும் உருக வில்லை. அவள் வாக்கினின்றும் பிறந்த நவமணியினும் அருமணியெனக் கொள்ளத்தகும் சொற்கள் சில இவை:— "இரக்கம் என்பது மேகத்தினின்றும் வருஷித்துக் கடுநிலத் தைக் கனிவிக்கும் வானமிர்தமாகிய இளமழைபோலத் துளிதுளியாய் வீழ்வது. அது இரங்குவோன், இரங்கப் பெறுவோன் இருதிறத்தாருக்கும் உயிர்த்துணையாக உத வும் அதிசயவரம். அது தேவ லக்ஷணங்களில் ஒன்று: ஆனதுபற்றி, அரசருக்கு நவரத்ந கசிதமான கிரீடத்திலும்

சிறந்த அணியாக விளங்குவது. மண்ணுலகாளும் மன்னருக்குள்ள இரக்கம் எவ்வளவோ, அவ்வளவிற்கு அவர்கள் நீதி உக்கிரந்தணிந்து பலப்படும். இவ்வாறு அவர்கள் அதிகாரத்திற்கு மாற்று ஏற ஏற, அது சர்வலோகாதிபதியாகிய கடவுள் அதிகாரமயமாகும். ஷைலக், சித்தம் இரங்கி நம்மை ரட்சிக்க நாம் கடவுளைப் பிரார்த்திப்பது அறிவீரே, அவ்வண்ணம் பிறர்மீது இரங்குவது நமது பாரம். இதை மறவாதிருக்கக்கடவீர்." அப்பால் நடந்த சம்வாதத்தை இதன் அடியிற் காண்க.

ஷைலக்—பத்திரத்தில் விதித்த தண்டம் இறுத்துத் தீர்க்கவேண்டும். இனி எந்தப் பேச்சும் வியர்த்தமே தவிர வேறல்ல.

போர்ஷியா—பணம் கொடுக்க அந்தோனியோவிற்கு நிர்வாகம் இல்லையா?

பஸ்ஸானியோ--அந்தோனியோ வாங்கின கடன் 13,500 ரூபாய். இதற்கு எத்தனை மடங்கு அதிகங் கேட்பினும், இந்தக்ஷணம் நானே கொடுத்துத் தீர்க்கிறேன். என்ன சொல்லுகிறீர், ஷைலக்?

ஷைலக்—பணத்தைக் குறித்துப் பேசுவதிற் பயன் இல்லை. எனக்கு அது வேண்டுவதில்லை. அந்தோனியோ உடலின் மாமிசம் ஒரு ருத்தல் சங்கேதப்படி அப்பியந்தரமின்றிக் கொடுக்கவேண்டும்.

பஸ்ஸானியோ — நியாயவாதியவர்களே! "பொய்மையும் வாய்மையிடத்த புரைதீர்ந்த, நன்மை பயக்குமெனின்;" சட்ட நிபந்தனைக்கு அற்பமேனும் விபரீத அர்த்தம்பண்ணி, இவ்வுற்ற சமயத்தில் அந்தோனியோவிற்குப் பிராண ரட்சை செய்வீர்களானால், எவரும் பெறுத பிரதிஷ்டை

பெற்றுச் சுகித்திருப்பீர்கள். இந்தப் புண்ணியம் கட்டிக் கொள்வீர்களானால், சுகிர்தம் உண்டு.

போர்ஷியா—இட்டு வழங்கிய சட்டத்தை எத்தனை நாட் சென்றும், சமயத்திற்கு ஏற்றபடி விகற்பிக்க விதி இல்லையே. இதற்குச் செய்யத் தகும் உபாயம் ஏதென்று அறியேன்.

(சட்டத்தின் அபிப்பிராயத்தைச் சமயோசிதமாகப் புரட்ட விதி இல்லையென்று போர்ஷியா வாக்கினின்று பிறந்த சொல் கேட்டு, அது தன் பக்ஷத்திற்கு அனுகூலமென்று ஷைலக் எண்ணமிட்டு மனம் பூரித்தான். மீண்டும் சம்பாஷணை தொடங்கிற்று.)

ஷைலக்—அகதிக்குத் தெய்வமே துணை; சித்தசுத்தியும் பக்தியுமுள்ள தானியேல் எனத்தகும் மஹானுபாவர் நியாயம் தீர்க்க வந்தது எனது பாக்கியந்தான்! ஞானசிகாமணியாகிய வாலிப நீதியதிபரே, நான் உம்மை நன்குமதிக்கும் அளவு சொல்லில் அடங்காது! இளைஞனானாலும் ஆடுவான் மூப்பு; நீர் பருவத்தில் வாலிபர், பகுத்தறிவிலோ விருத்தர்; இவ்வற்புதம் எங்கும் காணேன்!

போர்ஷியா — பத்திரம் எங்கே, படித்துப்பார்க்கக் கொடும்.

ஷைலக்—இதோ இருக்கின்றது; சுகமாய்ப் படித்துப் பாரும்.

போர்ஷியா—இதிற் கடன் தீர்க்கக் குறித்த தவணை கடந்ததனால், நீர் அந்தோனியோவின் இருதயகமலத்திற்கு அயலிடத்தில் மாமிசம் ஒரு ருத்தல் அறுத்து எடுத்துக் கொள்வது நியாயந்தான். அதற்கு ஆக்ஷேபம் இல்லை. ஆனாலும், கண் துடிக்க மனம் பதைக்க இவ்வாறு ஜீவவதை

செய்ய நிமித்தம் இல்லையே. சித்தம் இரங்கிப் பணத்தை ஒப்புக்கொள்ளும்; பத்திரத்தை உமது கண்ணுக்கு எதிரில் கிழித்துப்போடுகிறேன்.

ஷைலக்—தொடுத்த வழக்கில் சித்தம் இரங்கிப் பிரதிவாதிக்கு இளைப்பது எனது இயற்கை அல்ல. என்மேல் ஆணைப்படி சொல்லுகிறேன்; சாதுரிய சாமர்த்தியத்தால் என் மனம் திருப்ப வல்லார் இவ்வுலகில் இல்லை.

போர்ஷியா—இனி என்ன நிவிர்த்தி இருக்கின்றது? அந்தோனியோ! தசை அறுக்கவிட மனம்பொருந்தி எத்தனித்து நில்.

(அப்பால் ஷைலக் ஆவலித்து விரைந்து நெட்டலகுள்ள கத்தி ஒன்றைத் தீட்டிக் கருக்காக்கினான்.)

போர்ஷியா—சமயம் முந்துமுன் ஏதும் சொல்ல இருந்தால் சொல்லு, அந்தோனியோ.

அந்தோனியோ—முட்ட நனைந்தார்க்கு ஈரம் இல்லை, முழுதும் துணிந்தார்க்குத் துக்கம் இல்லை. இறக்க மனம் பொருந்தி எத்தனித்து நிற்கும் எனக்கு எதிர்வழக்கு இனி என்ன? அது நிற்க, பஸ்ஸானியோ, கைகொடுத்து விடை தாரும். சுகமே வாழ்ந்திரும்! உமது நிமித்தம் எனக்கு இந்தப் பிராணபத்து வந்ததை நினைந்து மனம் நொந்து வருந்தாதிரும். கனமும் தனமுமிக்க உமது பத்தினியார்க்கு விநயத்துடன் வந்தனம் சொல்லுகிறேன். அதையும், உம்மிடத்தில் எனக்குள்ள பிரியா நட்பையும் அறிக்கை செய்யும்.

பஸ்ஸானியோ—இவ்வேளையில் என் மனவுபத்திரவம் தெய்வத்திற்கன்றி உள்ளபடி மற்றெவருக்குத் தெரியும்! அந்தோனியோ! எனது உயிருக் குயிரான பெண்ணை உமது

சகாயத்தால் மணம்புரிந்தேன். என் ஜீவன், தாரம், இப் பூவுலகில் நான் அனுபவிக்கும் செல்வம் இவை அனைத்தி லும், உமது உயிரே எனக்குப் பெரிது. அடுத்திருக்கும் மரணத்திற்கு உம்மைத் தப்புவிக்கும்பொருட்டு, ஆவசியக மானுல், இவை யனைத்தையும் துரும்பெனவும் மதிக்காமல், பிசாசாவதாரமெடுத்து இங்கே வந்துநிற்கும் பிராணத் துரோகி மனதை வசப்படுத்தக் கொடுத்துவிடுவேன்.

உற்ற நண்பனுகிய அந்தோனியோவின்மீதுள்ள அன் பைத் தன் கணவர் இவ்வாறு வற்புறுத்தி வெளியிட்டது கேட்ட போர்ஷியாவிற்கு அற்பமேனும் மனத்துன்பம் உண்டாகவில்லை. அவள் தயாசிந்தையுள்ள உத்தமி. மனம் சகித்தும், நாவை அடக்கி மௌனம் சாதிக்கவோ அவளால் ஆகவில்லை. "நீர் சிந்தனையின்றித் திடீரென்று இந்தச் சபதம் சொன்னதை உமது மனைவி கிட்டநின்று கேட் டால், அவள் மனம் வெந்து புகைந்து வருந்துவாளே" என்ருன். பின்பு, பஸ்ஸானியோவைப்போலத் தானும் சபதம் கூற நினைத்து, அவன் லிகிதன் கிரேஷியானே, போர்ஷியாவின் பக்கத்தில் லிகிதன் உடைதரித்து எழுதிக் கொண்டிருந்த நிரிஸ்ஸா கேட்க, "எனக்கும் ஒரு மனைவி உண்டு. நான் அவளில் அன்புகூர்ந்திருப்பதை எந்தச் சபையிலும் சொல்லமாட்டுவேன். பரத்தில் தேவதாசந்நி தானஞ்சேர்ந்து பிரார்த்தனைசெய்து, கடிநாய்போல் வெட் டெனப்பேசும் இந்த யூதனுடைய கன்னெஞ்சைக் கரைத்து உருக்கும் வாக்கு வரம் அவளுக்கு இருக்குமானுல், என் பாக்கியந்தான். ஆ, இந்தக்ஷணமே அவள் பரகதியடை யாளோ!" என்றுரைத்தான். அதுகேட்டு, நிரிஸ்ஸா: "இப் பொழுது உன் மனைவி கண்ணுக்கு எதிரில் இல்லாததனுல் கடைத்தேறினுய். இருந்தாலோ, நாயும் பூனையும்போல்

உங்கள் இருவருக்கும் கலகமே தவிர, எந்நாளும் சமாதானம் இராது" என்றாள்.

செவிடன்காதிற் சங்கு ஊதினதுபோல், இவர்கள் சொன்ன சொல் ஒன்றும் ஷைலக் சிந்தையிற் புகவில்லை. அவன் தன் காரியத்திற் கண்ணாயிருந்தான். "வீண்காலக்ஷேபத்தில் நாழிகை செல்லுகின்றது. இனி என்ன, விசாரணை முடிந்ததே; விரைவில் தீர்ப்புச்சொல்லப் பிரார்த்திக்கிறேன்" எனப் பதறிக் கூவினான். தர்மசபைக்குப் போயிருந்த யாவருக்கும் பிறக்குந் தீர்ப்பை நினைக்க மனம் திடுக்கிட்டது. எவர் மனமும் அந்தோனியோவின் ஆபத்தை நினைந்துத் பரிதபித்து, ஆற்றலைத் துரும்புபோலச் சலித்தது.

மாமிசம் நிறுக்கக் குண்டு, தராசு இங்குண்டோவென விசாரித்து, போர்ஷியா யூதனைத் திரும்பிப்பார்த்து: "ஷைலக், நீ மாமிசம் அறுத்தெடுக்கும்பொழுது, உதிரம்பெருகி, அந்தோனியோ அவலமாய் இறந்துபோவானே, இரத்தம் தடுக்க ரணவைத்தியர் ஒருவரை அழைப்பி" எனச் சொல்ல, உதிரம் பெருகி அந்தோனியோ இறக்கவேண்டுமென்றே எண்ணமிட்டிருந்த ஷைலக்: "பத்திரத்தில் அவ்வாறு எழுதியிருக்கவில்லையே" என்றான். அதற்குப் போர்ஷியா: "பத்திரத்தில் எழுதியிருக்கவில்லை, அதனால் பிரமாதம் என்ன? நீ இப்படிச் செய்து புண்ணியம் கட்டிக் கொள்ளல் ஆகாதா?" எனக் கேட்டாள். அதற்கு ஷைலக் உத்தரம் சொல்ல நாழிகை செல்லவில்லை. "பத்திரத்தைப் பெயர்த்துப் பெயர்த்துப் பார்வையிட்டேன். அதில் இப்படி எழுதியிருக்கவில்லையே" என முன்சொன்னதையே பின்னும் சொன்னான். அப்பால் போர்ஷியா, "அந்தோனியோ உடலில் ஒரு ருத்தல் மாமிசம் உன் சொத்து.

இதற்குச் சட்டம் இடம் தரும். நீதியதிபர் விதிக்கும் தீர்ப்பும் இதுவே. மாமிசத்தை நீ அவன் மார்பில் அறுத்தெடுத்துக்கொள். இது தர்ம சம்மதம், அன்றியும் நியாய சபையிற் பிறக்கும் தீர்ப்பு" என வழக்கு அறுத்துச் சொல்ல, ஷைலக் மனம் பூரித்து: "எட்காய் பிளந்ததுபோல நிஷ்பக்ஷபாதமாய் விவகாரம் தீர்க்கும் விவேகபூரண தர்ம துரையவர்களே! தானியேல் எனத்தகும் திறமை விளங்கிய நீங்கள் வழக்குத் தீர்க்கவந்த என் பாக்கியமே பாக்கியம்!" எனச் சொல்லிக் கைக்கொண்டிருந்த நெட்டலகுக் கத்தியைத் தீட்டிக் கூராக்கி, அந்தோனியோவை ஆசைப் பெருக்கத்துடன் பார்த்து: "வா, வந்துநில்" என்ருன்.

அப்பொழுது போர்ஷியா, "சற்றுப் பொறு யூதா, இன்னும் ஒரு விஷயம் இருக்கின்றது. உதிரம் ஒரு துளியாவது உனக்குச் செலுத்தவேண்டுமென்று இப்பத்திரம் சொல்லவில்லை. 'மாமிசம் ஒரு ருத்தல்' என மயக்கமற வெளிப்படையாய் எழுதியிருக்கின்றது. குறித்தபடி ஒரு ருத்தல் மாமிசம் இந்தக் கிறிஸ்தவன் உடலில் அறுக்கும்பொழுது, உதிரம் ஒரு துளியாவது ஒழுகினுல், உன் வீடு வாசல், காணிபூமி முதலிய சொத்தனைத்தும் வெனிஸ் துரைத்தனத்தாராற் பறிமுதல் செய்யப்படும். சட்டம் இப்படி விதிக்கின்றது" என்று விரித்துரைத்தாள். அந்தோனியோவின் தசையை ஷைலக் இரத்தம் ஒரு துளியும் ஒழுகாமல் அறுத்தெடுத்துக் கொள்வது கட்டசாத்தியமாதலால், பத்திரத்திற் குறித்த தண்டம் மாமிசமே தவிர, உதிரமல்லவென்று புத்திசூக்ஷமுள்ள போர்ஷியா கண்டு வெளியிட்ட அந்தரங்கம் அந்தோனியோவை அவலச்சாவிற்குத் தப்புவித்தது. சமயோசிதமாக இவ்வற்புத யுக்தி பிறந்ததுபற்றி, நியாயசபையிற் கூடிய அமைச்சர் முதலிய

அனைவரும் பாலிய நியாயவாதியை இவர் உற்பாதபிண்டமோ! எட்டுத்திக்கிலும் மட்டற்ற கீர்த்திபெற்ற மதிமந்திரிகளுக்குப் புத்தி புகட்டவந்த அதிசய யூகியோ! இத்தனை புத்திசக்தியுடையோரை இந்நாளளவும் எங்கும் கண்டதில்லையென வியந்து மேலுமேலும் மெச்சிப் பாராட்டினார்கள். தர்மாலயத்தில் அவர்கள் வாழ்த்தொலியின் பிரதித்தொனி அடங்க நாழிகை சென்றது. "எட்காய் பிளந்ததுபோல் நிஷ்பக்ஷபாதமாய் விவகாரம் தீர்க்கும் விவேகபூரண தர்மதுரையவர்களே! தானியேல் எனத்தகும் திறமை விளங்கிய தாங்கள் வழக்குத் தீர்க்க வந்த என் பாக்கியமே பாக்கியம்!" என ஷைலக் மனம் பூரித்து மொழிந்த வாக்கியத்தைக் கிரேஷியானோவும் மனம் மகிழ்ந்து கூறினான்.

தன் குரூர அபிப்பிராயம் கடைத்தேருமற் சிதறியது கண்டு, மனம் தடுமாறிய ஷைலக் இனி அதற்கு ஏர்கும் உபாயம் இல்லையென்று எண்ணி, கொடுத்த பணத்தை வாங்கிக்கொள்வதே கருமம் என்றான். கும்பிடப்போன தெய்வம் குறுக்காக வந்தாற்போல, சடிதியில் போர்ஷியாவின் வாக்கினின்று பிறந்த அற்புத புக்தியால் அந்தோனியோ பிராணகண்டம் தப்பிப் பிழைத்ததை எண்ணி எண்ணி, ஒரு புயம் இருபுயமாக மனமகிழ்வுற்ற பஸ்ஸானியோ: "இதோ பணம் இருக்கின்றது, ஏற்றுக்கொள்ளும்" எனப் பதறி உரக்கச் சொன்னான். அப்பொழுது போர்ஷியா அவனைத் தடுத்து: "எதையும் பொறுத்துச் செய்வது அறிவுடையோர் இயற்கை; ஆத்திரப்படுவானேன்? உடன்படிக்கைப் பிரகாரம் யூதனுக்குத் தண்டமன்றி, பணம் ஒரு துட்டும் கிடையாது" என்று பின்பு யூதனைப் பார்த்து: "ஷைலக், நாழிகை ஆகிறது, மாமிசம்

அறுத்தெடுத்துக்கொள். அறுக்கும்பொழுது இரத்தம் ஒருதுளியும் வரவொண்ணாது, இதை மறந்துவிடாதே. அன்றியும், உனக்குச் செல்லவேண்டியது, ஒரு ருத்தல் மாமிசம். இதற்கு அணு அளவேனும் ஏறவும் ஒண்ணாது, குறையவும் ஒண்ணாது. தராசில் நிறுத்துப் பார்க்கும்பொழுது மாமிசம் மயிர்க்கிடை ஏறத்தாழ இருக்குமானால், இத்தேசத்துச் சட்டம் உன்னைத் தப்பவிடாது. நீ பிராணதண்டனை அடைவதுந்தவிர, உன் சொத்தும் பறிமுதல் செய்யப்படும்" எனச் சட்டத்தின் தாற்பரியத்தை விளக்கினாள். அதன்பின் ஷைலக்: "பணம்கொடுத்து என்னை அனுப்பிவிடுங்கள்" எனப் பரிந்துகேட்க, பஸ்ஸானியோ: "பணத்திற்குத் தடை என்ன! அது தயாராயிருக்கின்றது. இதோ வைத்திருக்கிறேன்" என்று உத்தரம் சொன்னான்.

அப்பால் ஷைலக் பணம் கையேற்கப் போகும் சமயத்தில், போர்ஷியா மீண்டும் அவனைத் தடுத்து, "சற்றுப் பொறு யூதா, இன்னும் உன்னிடத்தில் எனக்கு ஒருபிடி இருக்கின்றது. நீ வெனீஸ் பிரஜைகளில் ஒருவனுடைய பிராணனை வாங்கச் சர்ப்பனை செய்த துரோகி; இவ்வகைத் துரோகிகளைப் பிராணதண்டனைக்கு உட்படுத்தவும், சொத்தைப் பறி முதலாய்க் கொள்ளவும் இத்தேசத்துச் சட்டம் விதிக்கின்றது: ஆகவே, நீ உன் சொத்தைத் துரைத்தனத்தாருக்குப் போக்கடித்தாய். இனி அரசர் மனது இரங்கி விட்டாலன்றி, பிராணதண்டனைக்குத் தப்ப வகை இல்லை. முழந்தாள் மடக்கித் தாழ்ந்து பணிந்து மரணத்திற்குத் தப்புவிக்க அரசரை மனுக்கேள்" என்றாள்.

அதனபின் அரசன் ஷைலக்கைப் பார்த்து: "கேள் ஷைலக், உன் குலத்தாருக்கும் கிறிஸ்த சமயிகளாகிய எங்க

ளுக்கும் உள்ள தாரதம்மியம் உனக்கு எளிதில் உணர்த்தும்பொருட்டுக் கேட்குமுன்னதாகவே உனக்குப் பிராண ரக்ஷை தந்தோம். உன் சொத்தை எடுத்துப் பாதி அந்தோனியோவிற்குக் கொடுக்கப்படும்; பாதி இராசாங்கத்தார் சொத்துடன் சேர்த்துக்கொள்ளப்படும்" எனத் தீர்ப்புச் சொன்னான்.

இது நிற்க, இந்த யூதனுக்கு ஒரேயொரு மகள். அவள் தந்தை அனுமதியின்றி அந்தோனியோவின் இஷ்டனாகிய லொரென்ஸோ என்னும் கிறிஸ்தவனைச் சமீபகாலத்தில் மணம் புரிந்தாள். அதனால் யூதன் வெறுப்புற்று, தன் சொத்துரிமை அவளுக்கு இல்லை என்று சாதனம் எழுதி வைத்தான். இச்சங்கதி வரலாற்றை ஆதியோடு அந்தமாய் அறிந்திருந்த ஔதாரியனாகிய அந்தோனியோ அரசன் வாய்ச்சொற் கேட்டவுடன், திரும்பி ஷைலக்கைப் பார்த்து, "உன் சொத்தில் எனக்குவரும் பாதியை உனக்குப்பின் உன் மகளுக்கும் அவள் கணவனுக்கும் கொடுத்துவிடுவதாக வாக்குத்தத்தம்பண்ணி, பத்திரம் எழுதித் தருவாயானால், சொத்தை நீயே வைத்து அனுபவி" என்றான்.

யூதன் இதற்கு உடன்பட்டான்; ஆனாலும், தன் கருமம் சிதறிச் சொத்துப் பறிகொடுத்த துன்பத்தை அவன் மறக்கவே இல்லை. "என் மனம் துன்பப்படுகின்றது. விட்டுக்குப் போய்வருகிறேன். சொத்திற் பாதி எனக்குக் கொடுப்பதாகப் பத்திரம் எழுதி அனுப்பு. நான் அதைப் புத்திரிக்கு எழுதிக்கொடுப்பேன்" என்றான். அரசன் அதுகேட்டு: "அப்படியானால் போய்ப் பத்திரம் எழுதிவை; உனது குரூர குணத்தை நினைந்துப் பச்சாத்தாபப்பட்டுக் கிறிஸ்தவருக்குரிய பக்திநெறியில் நித்தம் ஒழுகுவாயானால், துரைத்தனத்தாராற் பறிமுதல் செய்யப்படும்

மற்றப் பாதிச்சொத்தும் உனக்கே திருப்பி ஒப்புவிக்கப் படும்" என்றான்.

அப்பால் அரசன் அந்தோனியோவைச் சிறைநீக்கி னன்; அம்மட்டில் விவகாரந் தீர்ந்தது. நியாயசபை கலைந்தபின், அரசன் பாலிய நியாயவாதியின் முதிர்ந்த ஞா னத்தையும் விவேகநுணுக்கத்தையும் பாராட்டி, தன்னு டன் அரண்மனைக்கு விருந்துண்ண வர வழைக்க, நியாயவா தியாகிய போர்ஷியா தன் கணவனுக்கு முந்திப் பெல்மோந் திற் போய்ச் சேர விரும்பியதனல், "ஏழைமீது லக்ஷியம் வைத்து விருந்து உண்ண இறைவர் அழைத்த பெருந்தகை மையை எந்நாளும் மறவேன். காலதாமசமின்றி நேரே ஊருக்குப்போக எத்தனித்திருப்பதனல் விடைதரப் பிரா ர்த்திக்கிறேன்" என்றாள். ஒருநாள் தங்கி விருந்துண்டு போக அவகாசம் இல்லாததைத்தொட்டு வியசனப்படுவ தாகச் சொல்லி, அரசன் அந்தோனியோவை நோக்கி, "இந்தப் பிரபு உனக்குச் செய்த உபகாரம் பெரிது, இவ ருக்குத் தகுதியான வெகுமதி கொடுப்பது உனது பாரம்" என மொழிந்தான்.

பிற்பாடு அரசனும் அமைச்சரும் தர்மாலயத்தை விட்டு வெளிப்பட்டார்கள். பஸ்ஸானியோ போர்ஷியாவிற்கு எதி ரிற்போய், "கனம் மிக்க துரையே! இன்று எனக்கும் இஷ்டர் அந்தோனியோவிற்கும் மலைபோல வந்த வினைகள் எல்லாம் தங்கள் பூரண விவேக சாதுரியத்தாற் பனிபோல நீங்கின. யூதனுக்குச் செலுத்தக் குறித்த ரொக்கம் 6000 ரூபாயும் தயைகூர்ந்து ஏற்கவேண்டுமென்று தங்களை இரந் து கேட்கிறேன்" என்றான். அப்பொழுது அந்தோனியோ மௌனமாய் நிற்கவில்லை. அவன், "தாம் செய்த பிரா ணேபகாரத்தை ஜீவன் உள்ளளவும் மறவாதிருந்து, தம்

மில் அன்புகூர்ந்து, தமக்குத் தொண்டுசெய்யப் பாத்தியப் பட்டிருப்போம்" என அறிக்கை செய்தான்.

கைநீட்டி ரொக்கம் வாங்கப் போர்ஷியா உடன்பட வில்லை. அப்படியானால், மற்றேதாயினும் ஒரு வெகுமதி ஏற்கவேண்டுமென்று பஸ்ஸானியோ பின்னும் வருந்திப் பரிந்துகேட்க, போர்ஷியா, "நீர் இப்படி நெருக்கிக்கேட் கும் கேள்விக்கு முகம் முறிய மறுமொழி சொல்லக்கூடா திருக்கின்றதே. நல்லது ஒன்று செய்யும். உமது கையு றையைக் கழற்றிக்கொடும். உம்மை வேண்டித் தரித்துக் கொள்வேன்" என்று உரைத்தாள். அந்தக்ஷணமே பஸ் ஸானியோ கைப்புட்டிலைக் கழற்ற, அவன் விரலில் இட்டி ருந்த தன் கணையாழியைப் போர்ஷியா கண்டாள். அவள் கைப்புட்டிலைக் கேட்டது முன்பு ஞாபக முத்திரையாகத் தான் கொடுத்த கணையாழியைத் தந்திரமாய்க் கைப்பற்ற வும், அப்புறம் பஸ்ஸானியோ பெல்மோந்திற் சேரும்பொ ழுது அவனை எளனம்பண்ணி மகிழவும் கருதியே. கணை யாழியைக் கண்டபொழுது போர்ஷியா, "உமது அன்பிற்கு ஓர் அடையாளம் வேண்டும். இந்தக் கணையாழியைத் தந்துபோம்" எனக் கேட்டாள். அவள் வாய்ப்பிறப்பைக் கேட்கவும், பஸ்ஸானியோவின் மனம் இருதலைக்கொள்ளி எறும்புபோலத் துறை தெரியாது சலித்துத் தடுமாறிப் பரி தபித்தது. அவன், "தர்மதுரையே! ஒரு வார்த்தை சொல் லக்கேளும். இந்தக் கணையாழி எனக்கு வாழ்க்கைப்பட்ட பிராணநாயகி தந்த ஞாபக முத்திரை. இதை எனது உயிர் உள்ளளவும் எவர்க்கும் கொடேனென்று அவ்வுத்த மிக்கு வாக்குத்தத்தம் செய்தேன். அதனால் இது ஒன்று தவிர, மற்றென்ன பொருள்கேட்டாலும் இல்லை என்னுமற் கொடுப்பேன். இத்தேசத்தில் இதனிலும் எழுமடங்கு விலை உயர்ந்த கணையாழி வேண்டுமானாலும் தேடி வாங்கித

தருவேன். மனதிரங்கி இம்மனுவிற்கு இடந் தரவேண்டும் மகாப்பிரபு" எனப் பதறிச் சொன்னான். அவன் சொற் கேட்டது கேளாமுன், போர்ஷியா இந்த அபராதத்தைச் சிந்தையில் வைத்தவள்போல நடித்து, "சொல்லக்கேளும் அபூர்வ தர்மிஷ்டரே! 'ஈத்துவக்கு மின்ப மறியார்கொ ருமுடைமை, வைத்திழக்கும் வன்க ணவர்' என நீதி இருக்கின்றது. வறுமை எனும் பிணியால் வருந்தி, நாவிற்குத் தாழ்வென்று எண்ணமல் யாசிக்கத் தலைப்படுவோர்க்கு இன்ன உத்தரம் சொல்லத்தகுமென்று உமது வாக்கு மூலமாய் அறிந்தேன். மிக்க உபகாரம்" என்று சொல்லித் தர்மாலயத்தினின்று வெளிப்பட்டாள்.

அது கண்டு, அந்தோனியோ பதைபதைத்து, பஸ்ஸானியோவைப் பார்த்து: "வாரும் பிராண இஷ்டரே! நான் உம்மிடத்தில் வைத்திருக்கும் நட்பையும் நியாயவாதி எனக்குச்செய்த மிக்க உபகாரத்தையும் எண்ணிப் பார்க்கும் பொழுது, உமது மனைவியின் வெறுப்பு அவைகளுக்கு ஈடாகாதே" என, பஸ்ஸானியோ சற்றுச் சிந்தனைசெய்து, செய்நன்றி கொன்ற தீயனென்று தன்னை உலகம் தூற்ரு வண்ணம், நியாயவாதி கேட்டபடி கணையாழியைக் கழற்றி, கிரேஷியானோவிடத்திற் கொடுத்து அனுப்பினன். அவன் அதை விரைந்து கொண்டுபோய், போர்ஷியாவின் கையில் ஒப்புவித்தான். முன்பு கிரேஷியானோவிற்கு ஒரு கணையாழி கொடுத்திருந்த நிரிஸ்ஸா என்னும் லிகிதனும் அதைக் கருதிக் கேட்க, கிரேஷியானோ, கொடையில் பஸ்ஸானியோவிற்கு இளைப்பது இழிவென்று எண்ணி, மறுத்து வார்த்தை சொல்லாமல் தன் கணையாழியையும் லிகிதனுக்குக் கொடுத்தான். பெருமாட்டிகள் இருவரும் வீடு சேர்ந்தபின், தங் கணவரைக் கணையாழி எங்கேயென்று

நெருக்கிக் கேட்டுக் குறுவிழி விழிப்பிக்கவும், தலைக்கு ஒன்ருகப் பெண்களுக்கு அவர்கள் அக்கணையாழிகளை வெகுமதி கொடுத்தார்களென்று பிரமாணத்துடன் குற்றம் பாரித்து வேடிக்கை பார்க்கவும் நிர்ணயித்து, மேலு மேலும் கெக்கலி கொட்டிச் சிரித்தார்கள்.

நன்றிசெய்யும் உத்தமருக்கு அதை நினைக்கும் சமயந் தோறும் மட்டற்ற சந்துஷ்டி உண்டாகும் இயற்கைப்படி, போர்ஷியா வீட்டுக்குப் போகுமார்க்கத்தில் தான் செய்த அபூர்வ நன்றியை எண்ணி எண்ணி மகிழ்ந்தாள். கண்ட காட்சிகள் அனைத்தும் அவளுக்கு மனோகரமாயிருந்தன. அன்று நிலாவெளிச்சம் பட்டப்பகல்போல மயக்கமற்றிருந்தது. உள்ளம் உவக்க ஒளிகாலுஞ் சந்திரன் மேகத்திற் சிறிது மறைந்து நிலாவெளிச்சம் குன்றவும், பெல்மோந்தில் அவள் வீட்டில் ஏற்றிய விளக்கொளி துலக்கமாய்த் தோன்றியது. அதைக் கண்டவுடன் போர்ஷியா நிரிஸ்ஸாவிற்குக் காட்டி, “அதோதெரிகின்றது என் மண்டபத்தில் ஏற்றிய விளக்கொளி. ஒருசிறிய தீபத்தின் கிரணம் இத்தனை தூரம் எட்டும் அதிசயம் பார்த்தையா! இப்பொல்லா உலகிற் செய்யும் எந்த நல்வினையும் இவ்வாறே எங்கும் பிரசித்தமாகும்” என்ருள். பின்பு கீதவாத்தியம் முழங்கக் கேட்டு, “பகலிலும் இரவிற் சங்கீதம் செவிக்கு மிக இனிதுபோலும்” என மொழிந்தாள்.

போர்ஷியா, நிரிஸ்ஸா இருவரும் வீடு சேர்ந்து, பூண்டிருந்த புருஷவேஷம் களைந்து, தங்கள் வஸ்திரம் தரித்து, கணவர் வருகையை எதிர்நோக்கியிருந்தார்கள். சிறிதுநேரம் சென்றபின் அவர்கள் இருவரும் அந்தோனியோவுடன்போய் இறங்கினுர்கள். பஸ்ஸானியோ தன் உயிர்த்தோழனுகிய அந்தோனியோவைப் போர்ஷியா பெருமாட்டிக்குக் காட்டி

இன்னுனென்று தெரிவிக்க, அத்தலைவி அவனை எற்கும் வண்ணம் வாழ்த்தி உபசரித்தாள். அவ்வேளையில் அம் மண்டபத்தின் ஒரு கோடியில் நிரிஸ்ஸாவிற்கும் கணவனுக்கும் விவாதம் உண்டான சத்தம் கேட்டது. கேட்கவும், போர்ஷியா, "ஆஹா! இதற்குள் வாக்குவாதம் உண்டாயிற்று? காரணம் என்ன?" என வினவ, கிரேஷியானோ, "பெருமாட்டியவர்களே! இவ்விவாதத்திற்கு மூலம் பொற்பூச்சுப்பூசிய அற்ப கணையாழி ஒன்று. கடையில் விற்குங் கத்தியலகின் அடியில் கருமான் பெயர்வரையும் வண்ணம் அக்கணையாழியில், என்னில் அன்புகூர்ந்து என்னைக் கை விடாதே எனும் வாக்கியம் வரைந்திருந்தது" என மறுமொழி சொன்னுன். பின்பு நிரிஸ்ஸா, "அவ்வாக்கியம் வரைந்த கணையாழி என்ன பொருளைக் குறிப்பிக்கும் முத்திரை? நான் அதைக் கொடுத்தபொழுது, மரணகாலபரியந்தம் கைவிடுவதில்லையென்று பிரமாணம் செய்தீர்களே, இப்பொழுது மோதிரம் எங்கேயென்று கேட்க, நியாயவாதியின் லிகிதனுக்குக் கொடுத்ததாகப் புரட்டுச்சொல்லுகிறீர்கள். நீங்கள் மோதிரம் கொடுத்தது ஒரு ஸ்திரீக்கு; இவ்வந்தரங்கம் அறிவேன்" என உள்ளதை ஒளிக்காமற் சொன்னுள். அதற்குக் கிரேஷியானோ, "கேளாய் பெண்ணே, நீ தந்த கணையாழியை இந்தக் கை கொடுத்தது ஸ்திரீஜாதிக்கே யல்ல, ஒரு வாலிபனுக்கு, ஒரு இளைஞனுக்கு, உன் உயரத்திற்குமேல் ஓரங்குலமும் உயராத ஒரு சித்திரக் குள்ளனுக்கு; அதிசய விவேக சாதுரியத்தால் அந்தோனியோவைப் பிராணதண்டனைக்குத் தப்புவித்த வாலிப நியாயவாதிக்கு அவன் லிகிதனுய் அமர்ந்தவன். அந்த வாயாடி தனக்குச் சேரவேண்டிய சுதந்தரத்திற்கு அந்தக் கணையாழியைத் தரச்சொல்லி என்னைத் தொந்தரவுபண்ணினுன். அவன் என்னை வாய் எடுக்கவிடவில்லை. கணையாழியைக்கொ

ண்டு தப்புவதுபிராண சங்கடமாயிருந்தது. அப்புறம் என்ன செய்யலாம். கொடுத்துவிட்டுவந்தேன்" எனப் பிரதியுத்தரம் சொன்னான். அதுகேட்டுப் போர்ஷியா, "உமது மனைவி முதலில் கொடுத்த அரிய ஞாபகமுத்திரையை நீர் சிந்தனையின்றி அன்னியனுக்குக் கொடுத்தது அக்கிரமம். என்பிராணநாதராகிய பஸ்ஸானியோவிற்கு நான் கொடுத்த கணையாழியை அவர் இவ்வுலகமுழுதும் தமக்குக் காணியாட்சியாக வந்தாலும் இப்படிப்போக்கடிக்காரென்று உறுதிமொழி சொல்லமாட்டுவேன்" என வற்புறுத்திச் சொன்னாள். அப்பொழுது கிரேஷியானோ தன் குற்றம் தணிவிக்க நினைத்து, "நான் செய்த அக்கிரமம் என்ன? என் தலைவர் பஸ்ஸானியோ தமது கணையாழியை நியாயவாதிக்குக் கொடுத்தது கண்டு, விவகாரச் சங்கதிகளைச் சிரமப்பட்டு எழுதின லிகிதன் என்னையும் கணையாழி கேட்டான். மறுத்துச் சொல்ல வகையின்றிக் கொடுத்துவிட்டேன்" என்று வெளிப்படையாய்ச் சொன்னான்.

அவன் சொல் கேட்டவுடன் போர்ஷியாவிற்குக் கோபத்தீ பற்றி எரிந்தது. தன் கணையாழியைக் கொடுத்துவிட்டு வந்ததனால், அவள் பஸ்ஸானியோவைத் தூஷித்தாள்; நிரிஸ்ஸா சொன்னபடி கணையாழி ஒரு ஸ்திரீ கையிற் சிக்கியது மெய்யென்று சாதித்தாள். தன் அரிய மனைவிக்கு இவ்வாறு வெறுப்பு வருவித்ததுபற்றி, பஸ்ஸானியோ தீராத் துயர் அடைந்தான். கபடமின்றி நடந்த வரலாறுகளை வெளியிட்டான். அவன் வாக்குமூலம் இது:—"அபத்தம் சொல்லி அவமானப்படுவது எனது இயற்கை அல்ல. ஸ்திரீஜாதிக்கு நான் கணையாழி கொடுக்கவே இல்லை. கொடுத்தது நியாயவாதிக்கு. முதலில் ரூபாய் கொடுக்கப்போனேன். அவர் அது வேண்டாமென்று கணையாழியைக்

கேட்டார். மறுத்துச்சொன்னேன். வெறுப்புற்று அவர் போய்விட்டார். என் மனம் மரண அவஸ்தைப்பட்டது. நன்றிகெட்ட துரோகியென்று நால்வரும் தூஷிப்பார்களே என நினைந்து, கணையாழியை அவருக்கு அனுப்பினேன். நேரிட்ட சங்கடத்தை நிவிர்த்திக்கச் செய்த பிழையைப் பொறுப்பது உனது பாரம். என் பிரியநாயகி, பெண்பாலார்க்குத் திலதமாக விளங்கும் உத்தமபத்தினி, அந்தச் சமயத்தில் நீ அங்கிருக்கச் சம்பவித்தால், தர்மசாஸ்திர பண்டித சிரோமணியாகிய அம்மஹானு பாவருக்கு நீயே வலிய என்னை வருந்திக் கேட்டுக் கணையாழியை வாங்கிக் கொடாதிராய்.”

இதெல்லாம் கேட்டு நின்ற அந்தோனியோ, “ஆ! ஆ!! வசையில்லாக் குடும்பத்தில் இந்தத் தீராப் பிணக்கு வருவித்த பாபிஷ்டனுனேனே! நல்ல மரத்திற் புல்லுருவி போலத் தலைப்பட்டு, வாழும் குடும்பத்தைப் பாழில் கெடுக்கும் வன்கண்ணனென்று என்னை எல்லோரும் திட்டுவார்களே! இப்பழி தொலைய எத்தனை நாட் செல்லுமோ, தெய்வமே!” எனத் துன்பக்கடலில் ஆழ்ந்து ஓலமிட்டான்.

போர்ஷியா அந்தோனியோவைத் தேற்றி, நீர் துயரப்பட நிமித்தம் இல்லை. நீர் செய்தது பேருபகாரம். அதற்காக நாம் அனைவரும் உம்மை உபசரிக்கத் தகும் என்றுள். பின்பு அந்தோனியோ, “எனது உடலைப் பஸ்ஸானியோவிற்காக ஒருவருக்கு ஈடு வைத்திருந்தேன்; தங்கள் கணவர் கணையாழி ஒப்புவித்துவந்தாரே; அந்தப் புண்ணிய புருஷர் உற்ற சமயத்தில் அற்புத சாமர்த்தியத்தால் என்னை மரணத்திற்குத் தப்புவிக்காதிருந்தால், நான் இப்பொழுது பிரேதலோகத்தாரில் ஒருவனுயிருப்பேன். இனி ஒருபொழுதும் தங்கள் கணவர் வாக்குப் புரளாது. மீண்டும் நானே

அவருக்குப் பிணை" என்றான். போர்ஷியா, "அப்படியானால், இந்தக் கணையாழியை அவர் கையிற் கொடுத்து; முந்தின கணையாழியைப்போலப் போக்கடிக்காமல் பத்திரமாய் வைத்திருக்கச் சொல்லும்" என்று ஒரு கணையாழி கொடுத்தாள். அதை வாங்கி, அந்தோனியோ பஸ்ஸானியோவிடத்தில் ஒப்புவித்தான்.

பஸ்ஸானியோ அதைத் திருப்பித் திருப்பிப் பார்த்து, அதுவே தான் நியாயவாதிக்குக் கொடுத்ததென்று ஐயந்திரிபற அறிந்து ஆச்சரியபரவசமடைந்தான். பின்பு போர்ஷியா தானும் நிரிஸ்ஸாவும் புருஷவேஷம் தரித்து நியாயவாதியும் லிகிதனுமாகத் தர்மசபைக்குப் போனது முதலிய அந்தரங்கங்களை வெளியிட்டாள். ஆகவே, தன் மனைவியின் அதிசய தீரமும் அற்புத விவேகமுமே அந்தோனியோவை மரணத்திற்குத் தப்புவித்தனவென்று அறிந்து, பஸ்ஸானியோ சொல்வதற்கு அரிய ஆநந்தமடைந்து அதிசயித்தான்.

உருக்கள் கடற்சேதப்பட்டனவென்று செய்தி கேட்டு, அந்தோனியோ ஆருத்துயர் அடைந்திருந்தானே; அவ்வதந்தி அபத்தம். உருக்கள் நல்ல பயணமாகத் துறை சேர்ந்தன வென்று வந்த கடிதம் இரண்டொன்று போர்ஷியா வசம் தற்செயலாகச் சேர்ந்தன. அவள் அக்கடிதங்களை அந்தோனியோவிடத்தில் ஒப்புவித்து, மீண்டும் மங்கல மொழிகளால் அவனை வாழ்த்தினாள். இவ்வாறு தனிகனாகிய அவ்வர்த்தகன் ஆதியில் நேரிட்ட ஆபத்துகள் அனைத்தையும் மறந்து, அளவற்ற திரவியசம்பத்தும் செல்வாக்குமுடையோனாகிச் சுகித்திருந்தான். ஸ்திரீகள் இருவரும் வேஷமாறித் தங்கணவரிடத்திற் கணையாழி அபகரித்த இந்திரசாலத்தைப் பற்றி நெடுநாள்வரையில் நினைத்

துப் பேசி மகிழ்ந்து கொண்டாடினார்கள். கிரேஷியானோ, “இவ்வுடலும் உயிரும் ஒன்றைவிட்டொன்று பிரியாதிருக்குமளவும் என் மனைவி தந்த இந்தக் கணையாழியைக் கைவிடாதிருப்பதே இராப் பகல் என் காதல்” என்று மனமகிழ்ந்து பிரமாணஞ்செய்தான்.



Printed at the C. L. S. Press Memorial Hall Madras.